94

ரூ. 5.00

திருவள்ளுவராண்டு 2038
வைகாசி - மே 2007

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய
திங்களிதழ்

## தேசிய ஊரக வேலை உறுதித் திட்டத்தின் கீழ் குன்றக்குடி ஊராட்சியில் நடைபெற்ற கண்மாய் தூர்வாரும் பணி

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை | | | |
| வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

## சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| தனி இதழ் | ரூ. | 5-00 |
| ஆண்டுச் சந்தா | ரூ. | 60-00 |
| ஆயுட் சந்தா | ரூ. | 600-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. | 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :

*நிர்வாகி,*

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

தொலைபேசி எண். 04577 - 264227

ஆதீன இணையதள முகவரி :
www.kundrakudi_aatheenam.org.

ஆசிரியர்

**மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் :
சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருவள்ளுவராண்டு 2038 (சர்வசித்து) மாதம் : வைகாசி

மலர் : 2 இதழ் : 5



## நெஞ்சில் நிற்கும் நினைவுகள்!

அருள்நெறித்தந்தை தமிழ்மாமுனிவர் தவத்திரு குன்றக்குடி அடிகள் பெருமான் கல்வி வெளிச்சம் மறுக்கப்பட்ட, பிற்படுத்தப்பட்ட, மிகப்பிற்படுத்தப்பட்ட தாழ்த்தப்பட்ட ஏழை எளிய அடித்தளத்து மக்களின் குழந்தைகளுக்காய்ப் பல அறிவு ஆலயங்களை எழுப்பி, கல்விச் சேவை செய்த காலம்! தேவகோட்டையில் உள்ள ஆதீன நிர்வாகத்தின் பள்ளித் தலைமையாசிரியர் மகாசன்னிதானத்தை ஒரு குருபூசை நாளன்று சந்தித்து ஆசிபெற்றார். ஆசி பெற்றபின், தயங்கியவாறு தலையைச் சொறிந்து கொள்கின்றார். "என்ன வேண்டும்?" என்று மகாசன்னிதானம் கேட்டவுடன் பள்ளிக்கூரை வேய வேண்டும், மழையில் கடுமையாய் ஒழுகுகின்றது என்று சொன்னாராம்.

மகாசன்னிதானம் ஒரு நிமிடம் யோசித்தபின் "இருங்கள் வருகிறேன்!" என்று சொல்லி அறைக்குள் சென்றார்கள்! திரும்பி வரும்பொழுது கையில் சுமார் 10 பவுன் எடையுள்ள தங்க அரைஞாண் கொடி. அது சில தினங்களுக்கு முன்தான் மகாசன்னிதானம் மலேசியா நாட்டுக்குச் சுற்றுப்பயணம் செய்த பொழுது அந்த மக்கள் தங்கள் அன்பளிப்பாக வழங்கியது. 10 பவுன் எடையுள்ள தங்க அரைஞாண் கொடியை தலைமை ஆசிரியரிடம் கொடுத்துப் பள்ளிக் கூரையை மாற்றுங்கள் என்று அளித்தார்கள். தலைமை ஆசிரியர் தயங்கியவாறு கண்ணீர் வழிய பெற்றுச் சென்றார்!

விதவிதமாய் தங்க ஆபரணங்கள் அணிகின்ற மடாதிபதிகள் நடுவில், மலேசிய நாட்டு மக்கள் அன்பின் வெளிப்பாடாய்த் தந்த தங்க அணியை ஏழைக் குழந்தைகளின் கல்வி வெளிச்சத்திற்கு வழங்கிய மகாசன்னிதானத்தின் தாயுள்ளம் கண்டு நெஞ்சம் நெகிழ்ந்து போனோம்.

குருமகாசந்நிதானம் காட்டிய தூய துறவுப்பாதையில் தொண்டுப்பாதையில் நாம் இணைந்த நேரம்! மகாசன்னிதானத்தின் வழியில் நாம் துறவறத்தில் இணைந்த செய்தி கேட்டு குடும்பத்தினர் பதறி ஓடி வந்தனர்! நம்மைக் காவி உடையில் கண்ட தாய் ஆத்திரத்தின்

உச்சத்தில் பேசினார்! அதிகம் பேசத் தெரியாத அதிகம் படிக்காத தாய்க்குள் இவ்வளவு கோபத்தை அன்றுதான் பார்க்க முடிந்தது! நாம் வீடு திரும்ப வேண்டும் என்பது குடும்பத்தினர் நிர்ப்பந்தம். நாட்டுக்கு ஒருவரைத் தந்த தாய் என்ற பெருமையுடன் செல்லுங்கள் என்று நமது நிலையில் உறுதிப்பாடு! மனம் தளர்ந்தும் சோர்ந்தும் போன நிலையில் என்றாவது ஒருநாள் வருவோம் என்ற நம்பிக்கையோடு சென்றுவிட்டார்கள்! அன்று மாலை ஒரு கூட்டத்தில் மகாசன்னிதானத்தின் தலைமையில் உரையாற்றத் தொடங்கினோம். "தாய்ப்பால் குடித்த உணர்வைவிட மகாசன்னிதானத்தின் தமிழ்ப்பால் குடித்த உணர்வில் தான் உரையாற்றுகின்றோம்" என்று தொடங்கினோம்!

மகாசன்னிதானத்தின் விழிகள் கண்ணீரால் நனைந்திருந்தது. மகாசன்னிதானத்தின் உணர்வில் கரைந்தும் உறவில் நெகிழ்ந்தும் துறவுப் பணிகளைத் தொடர்ந்து கொண்டிருந்த காலம்!

அருள்நெறித்தந்தை அடிகள் பெருமான் சுதேசி விஞ்ஞான இயக்கம் என்ற அமைப்பின் மூலம் கிராமப்புற அறிவியல் கண்காட்சிகளை அறிவியல் வேள்வியாக நடத்திக்கொண்டிருந்த நேரம்! மாவட்டம் ஒன்றியங்களாகப் பிரிக்கப்பட்டு ஒன்றியத்திற்கு ஒரு பள்ளி வீதம் அறிவியல் கண்காட்சி பிரம்மாண்டமாய் நடத்தப்படும்! மகாசன்னிதானம் அறிவியல் கண்காட்சியில் பங்குகொள்ளும் ஆயிரக்கணக்கான குழந்தைகளுக்கு (இளங்குழந்தை விஞ்ஞானிகளுக்கு உணவு அளிப்பார்கள்) நமது ஆதீன நிர்வாகத்தில் பறம்புமலையில் உள்ள வள்ளல் பாரி மேல்நிலைப்பள்ளியில் அறிவியல் கண்காட்சி நடத்த திட்டமிடப்பட்டிருந்தது. கடைசி நேரத்தில் பள்ளிக் கட்டிட வசதி இன்மை காரணமாக, வேறு பள்ளிக்குக் கண்காட்சி மாற்றப்பட்டது! அறிவியல் கண்காட்சி இடமாற்றம் செய்யப்பட்டது குறித்து மகாசன்னிதானத்திடம் ஒரு வருத்தம் கலந்த மௌனம்! அந்த மௌனம் நமக்கு ஒரு ஆணையைப் பிறப்பிப்பதாய் உள்மனம் உணர்த்தியது!

சில மாதங்களில் உலகமே கதறி அழ மகாசன்னிதானம் நம்மிடம் இருந்து விடைபெற்றுவிட்டார்கள்! மகாசன்னிதானம் காட்டிய சமய சமுதாயத் தடத்தில் நாம் பணிகளைத் தொடர்ந்தோம்! சுதேசி விஞ்ஞான இயக்கத்தின் வாயிலாக அறிவியல் கண்காட்சிகளைத் தொடர்ந்து செயல்படுத்திக் கொண்டிருந்தோம்! அறிவியல் பரப்பும் பணியில் காரைக்குடி மையமின்வேதியியல் ஆய்வகத்தின் பங்களிப்பு பாராட்டுக்குரியது.

அறிவியல் கண்காட்சியின் நிறைவு விழா மேடையில் சிவகங்கை மாவட்டத்தின் அந்நாளைய முதன்மைக் கல்வி அலுவலர் ஒருவர் சுதேசி விஞ்ஞான இயக்கத்தின் பணிகளை ஊக்கப்படுத்துவதை விட்டுவிட்டு, பறம்புமலை வள்ளல் பாரி மேல்நிலைப்பள்ளி கட்டிட வசதி இன்மையைப் பெரிதுபடுத்திப் பேசியது நம் மனத்தைச் சுட்டது! உள்ளுக்குள் ஒரு வைராக்கியம்! மகாசன்னிதான்ம் உள்உணர்வின்வழி நமக்கு ஆணையிடுவது போல் தெரிந்தது!

ஓரிரு ஆண்டுகளில் வள்ளல்பாரி மேல்நிலைப்பள்ளிக்குப் புதிய கட்டிடங்கள் எழுப்பப்பட்டன! கூரையாய் இருந்த பள்ளி இரண்டு அடுக்கு மாடியாய் உயர்ந்தது. மகாசன்னிதானத்தின் நினைவுகளைப் போற்றி பள்ளிக்கட்டிடங்கள் நாட்டுக்கு அர்ப்பணிக்கும் விழா நாள் காலை! கோலகலமாய் பள்ளிக் கட்டிடத் திறப்புவிழாக் கொண்டாட இருக்கும் நாள் அதிகாலைப்பொழுது! தொலைபேசி ஒலித்தது! தொலைபேசியை எடுத்த நாம் அப்படியா என்பதோடு மௌனம் ஆனோம்! அடுத்த தொலைபேசி பள்ளித் தலைமைஆசிரியர் பள்ளி விழா என்று தயங்கித் தயங்கிப் பேசினார்! நடக்கட்டும்! நடக்கும் என்கிறோம்! விழா நாள் மாலை, பள்ளிக் கட்டிடத் திறப்பு விழா, ஊரின் திருவிழாவாய் நடந்தது! மக்களும், மாணவ மணிகளும் மகிழ்ச்சி வெள்ளத்தில்! நாடாளுமன்ற உறுப்பினரும், சட்டமன்ற உறுப்பினர்களும் பங்கெடுத்துக் கொண்டனர்! விழாவிற்கு வந்தோரை எல்லாம் வரவேற்று உபசரித்தபிறகு கட்டிடத் திறப்பு விழா தொடங்கியது!

தாய்ப்பால் ஊட்டிய உணர்விலும், தமிழ்ப்பால் ஊட்டிய குருமகா சன்னிதானத்தின் நினைவுகளோடு கட்டிடத்தினைத் திறந்து, குத்துவிளக்கினை ஏற்றினோம்! விளக்கு வேகமாய்ச் சுடர்விட்டு பிரகாசித்தது!

விண்ணில் இருந்து விழுந்தன மழைத்துளிகள்!
மகாசன்னிதானம் ஆசீர்வதிப்பதுபோல் இருந்தது!

அதே நாளில், அதேவேளையில், அதே நேரத்தில், துறவறத்திற்கு முந்தைய நமது பழைய உடைகளையும், நினைவுகளையும் அடைகாத்து சுமந்துகொண்டிருந்த நம்மைப் பெற்றெடுத்து தாயின் இறுதி ஊர்வலம்! வரமாட்டான் என்பது போல் பயணம்!

*விண்ணின் மழைத்துளியோ,*
*தம் கண்ணின் நீர்த்துளியோ*
*தன் கண்மணியின்மீது படாமல் காப்பதுதான்*
*தாய்மையின் உள்ளம்!*

இங்கு பறம்புமலைப் பள்ளி வளாகத்தில் மழைத்துளிகள் வலுத்தன! காற்றில் படபடக்கும் குருவியின் சிறகுகள் போல் மழைவந்தால் பயப்படும் பள்ளி வளாகம் இன்று அமைதியில்! ஆயிரம் குழந்தைகளுக்கும் இன்று அந்த அறிவு ஆலயம் மழைத்துளிபடாமல் அடைக்கலம் தந்தது!

கோபம் தணிந்து மௌனமாய் பயணிக்கும் தாய், நம் காதருகே
*"என் கருப்பை சுமந்த கடனைத்*
*தீர்த்து விட்டாய்"*

என்பது போல் ஒலித்தது! மழைத்துளிகள் வழியே மகாசன்னிதானம் வாழ்த்துவதாய் மனம் உணர்ந்தது! மழைத்துளியோடு நம் கண்ணீர்த் துளிகள் கரைந்து காணாமல் போனது!

பொன்னம்பல அடிகள்

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

## (தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

## 75. அரண்

நாட்டினைப் புறப்பகையினின்று காக்க உதவி செய்தல் அரண். அரணின் இலக்கணமும் இயல்பும் விரித்துரைப்பது இந்த அதிகாரம்.

*ஆற்று பவர்க்கும் அரண்பொருள் அஞ்சித்தற்*
*போற்று பவர்க்கும் பொருள்.* (741)

பிறர்மேல் படையெடுத்துச் செல்லும் அரசுகளுக்கும் அரண் பொருள் அச்சத்தின் காரணமாகப் பிறர்மேல் செல்லாது தன்னைத்தானே காத்துக் கொள்பவர்களுக்கும் அரண் பொருளேயாம்.

*மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்*
*காடும் உடைய தரண்.* (742)

முத்து, மணி இவைகளின் நிறத்தை -டைய நீரும், மணல் வெளியும் மலையும் அடர்த்தியான நிழல் தரும் காடும் முறையாக அமைந்தது அரண். (கோட்டை).

மணி, முத்து நிறமுள்ள தண்ணீர் தூய்மையாக இருக்கும். தூய்மையாக இருப்பதால் தரைமட்டம் அண்மையில் இருப்பது போலத் தெரியும்.

ஆழம் மிகுதியாயிருக்கும் - ஆனால் ஆழம் குறைவானது போலத் தரை தெரியும்.

*உயர்வகலந் திண்மை அருமையிந் நான்கின்*
*அமைவரண் என்றுரைக்கும் நூல்.* (743)

கோட்டைச் சுவர் உயரம் அகலம் உறுதி அணுகுவதற்கு அருமை என இந்நான்குடையதாய் அமைவது அரண் என்று நூல்கள் கூறும்.

"உயரம்" - ஏணிவைத்து ஏற இயலாது. "அகலம்" - எளிதில் கடத்தலோ சுரங்கப்பாதை அமைத்தலோ இயலாது. "திண்மை" - எளிதில் இடிபடாத் தன்மை. "அருமை" - தோற்றத்தாலேயே அச்சுறுத்தும் தன்மையது.

*சிறுகாப்பிற் பேரிடத்த தாகி உறுபகை*
*ஊக்கம் அழிப்ப தரண்.* (744)

சிறிய முயற்சியினாலேயே காப்பதற்குரியதாய், அகன்ற இடத்தையுடையதாய் அமைந்து, வந்து தாக்கும் பகைவருடைய மனவெழுச்சியைக் கெடுப்பதே அரண்.

பெரிய முயற்சிகள் இல்லாமல் சிறிய முயற்சிகளாலேயே காக்கப்படுவது சிறந்த அரண்.

*கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி அகத்தார்*
*நிலைக்கெளிதாம் நீர தரண்.* (745)

பகைவர் எளிதிற் பிடிக்க இயலாததாகவும், தேவையான உணவுப் பண்டங்களைக் கொண்டதாகவும் கோட்டைக்குள் இருப்பவர்கள் எளிதில் வெற்றி பெறத்தக்கதாகவும் அமைவது அரண்.

*எல்லாப் பொருளும் உடைத்தாய் இடத்துதவும்*
*நல்லா ளுடைய தரண்.* (746)

கோட்டைக்குள் இருந்து போராடுவோருக்குத் தேவையான எல்லாப் பொருள்களையும் உடையதாய, பகைவர்க்கு இடங்கொடாத நல்ல படை வீரர்களை உடையதாகவும் இருப்பதே அரண்.

*முற்றியும் முற்றா தெறிந்தும் அறைப்படுத்தும்*
*பற்றற்கு அரியது அரண்.* (747)

அரணுக்குள் இருப்பார் வெளியே போகாமல் பாதுகாத்துக் கொள்ளத்தக்கவாகவும் ஒரேவழியில் அரணைத் திறந்து அரணை முற்றுகை செய்துள்ளோரிடம் போர் செய்யும் வசதியுள்ளதாகவும், பகைவரால் எளிதில் கையகப்படுத்தமுடியாததாகவும் அமைந்தது அரண்.

அக்த்திருப்போர் வெளியே போதல் போர்ச் சூழ்ச்சிகளுக்கு இடையூறு விளைவிக்கும்.

*முற்றுஆற்றி முற்றி யவரையும் பற்றுஆற்றிப்*
*பற்றியார் வெல்வது அரண்.* (748)

அரணின் அகத்திலிருப்போரைப் பாதுகாத்தும், தம் அரணை முற்றுகை செய்திருப்பவர்களையும் அரணைப் பிடிக்க முடியும் என்ற ஆசையை விடும்படியாகத் தாக்கித் துன்புறுத்தி வெல்வதற்குத் துணையாய் அமைவது அரண்.

முற்றுகை செய்தவர் பிடித்தல் அருமை கருதி ஆசையை விடுதல் - பற்றாற்றுதல்.

*முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து*
*வீறுஎய்தி மாண்டது அரண்.* (749)

அரண் அகத்தார் வெற்றி கருதிச் செய்யும் முயற்சிகளுக்குத் துணையாய் அமைந்து போர்முனையில் பகைவரைத் தோற்றோடச் செய்து; நிமிர்ந்து புகழுடன் நிற்பது அரண்.

அகத்தார் செய்யும் முயற்சியும் பகைவர் வீழ்தலும் ஒன்றோடொன்று தொடர்புடையது.

இந்தக் குறள் அரணுக்குச் சொன்னாலும் தோழமைக்கும் கூட இத்தகைய பண்பு அமைந்திருந்தால் நல்லது.

*எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி*
*இல்லார்கண் இல்ல தரண்.* (750)

எத்தகைய மாட்சிமையுடைய அரண் இருந்தாலும் செயல்திறன் இல்லாதார்மாட்டு அரண் பயனில்லாமல் போகிறது.

எந்த வகையான மாட்சிமைக்கும் செயல்மாட்சியே அடிப்படை.

*(தொடரும்)*

## தமிழ்ப்பண்பாட்டை மீட்டுருவாக்கம் செய்யத் தமிழக அரசுக்கு வேண்டுகோள்

தமிழைச் செம்மொழி - செவ்வியல் மொழி எனச் சீர்தந்த சிறப்புக்கு ஏற்ப, அமையவிருக்கும் "செம்மொழி உயர் தகவு ஆய்வு மையத்தில்" இடைக்காலத்தே களப்பிரர், பல்லவர், நாயக்கராட்சிகளிலும் புத்த, சமண, வைதிக சமயக் கலப்பாலும் பிறமொழிமயமாக்கப்பட்ட அனைத்துக் கலைகளையும் பெயர்களையும் சொற்களையும் தொழில் சார்ந்தவை - சமயம் சார்ந்தவை என்பன எல்லாவற்றையும் மீட்டுருவாக்கம் செய்து, தமிழாக்க வேண்டுகிறோம்.

- தமிழண்ணல்

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# குன்றக்குடிக் குடைவரைகளும் கல்வெட்டுகளும்

(டாக்டர். மு. நளினி, டாக்டர். இரா. கலைக்கோவன்)

## நாட்டுப் பிரிவுகள் - அரசியலமைப்பு

முதலாம் இராஜராஜரின் கல்வெட்டில் பாண்டி நாடான இராஜஇராஜ வளநாட்டுத் தேனாற்றுப் போக்கிலிருந்த ஊராகக் குறிக்கப்படும் குன்றக்குடி, முதலாம் குலோத்துங்கர் காலக் கல்வெட்டுகளில் இராஜராஜப் பாண்டி நாட்டு இராஜேந்திர சோழ வளநாட்டுத் தேனாற்றுப் போக்கிலிருந்த திருக்குன்றக்குடி எனச் சுட்டப்படுகிறது.

பிற்பாண்டியர் கல்வெட்டுகளில் மண்டலப் பெயர் மறைந்து இராஜேந்திர சோழ வளநாடு, கேரளசிங்க வளநாடாகப் பெயர் மாற்றம் பெறுவதைப் பார்க்கிறோம். இவ்வளநாட்டினுள் அடங்கிய அதலையூர் நாட்டுத் தேனாற்றுப் போக்கிலிருந்த ஊராகக் கல்வெட்டுகளில் குன்றக்குடி நிலைபேறடைகிறது. பிற்பாண்டியர் கல்வெட்டுகளில் சில, நியமப் பற்றிலிருந்த ஊராகக் குன்றக்குடியைக் குறிக்கின்றன. முதலாம் குலோத்துங்கரின் இருபத்திரண்டாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் மட்டும் குன்றக்குடியான தென்புகலூர் என்று குன்றக்குடியின் மற்றொரு பெயர் பதிவு செய்யப்பட்டுள்ளது.

குன்றக்குடிக் கல்வெட்டுகளில் குறிக்கப்படும் மற்றொரு வளநாடு திருவழுதி வளநாடாகும். முதலாம் இராஜேந்திரரின் காலத்தில் பாண்டிய மண்டலத்தில் இருந்த வளநாடுகளில் இதுவும் ஒன்று போலும். அதலையூர் நாடு, கல்வாயில் நாடு, நியமப்பற்று என்பன இக்கல்வெட்டுகளில் குறிக்கப்படும் நர்ட்டுப் பிரிவுகள். இவற்றின் கீழிருந்த ஊர்களுள் சிலவற்றின் பெயர்களைக் கல்வெட்டு வரிகளில் காண முடிகின்றது.

இவற்றுள் பெரும்பான்மையானவை மங்கலம், குடி, ஊர், நல்லூர் என்னும் பின்னொட்டுகளைக் கொண்டுள்ளன. குடியென்று முடியும் பெயர்களே அதிக அளவில் காணப்படுகின்றன. வயல் என்று முடியும் இரண்டு ஊர்களும் வாயில் அல்லது வாசல் என்று முடியும் இரண்டு ஊர்களும் உள்ளன. இவை தவிர செங்கணி, படைகாணி, மணியாத்திறல்,

ஆர்க்காடு, நியமம், முள்ளிக்குண்டு, கோனேரி, குறட்டி, நடுவக்கோட்டை, துழயூர்வல்லி, குலசேகரபுரம் என்னும் ஊர்களும் சுட்டப்படுகின்றன. இரண்டு ஊர்கள் இரண்டு பெயர்களுடன் இருந்துள்ளன. சாழியாகிய திருச்சமணமழகிய நல்லூர் மன்னர் பெயரற்ற கல்வெட்டிலும் இடைக்குடியான இரவிகுலமாணிக்கநல்லூர் முதலாம் குலோத்துங்கரின் கல்வெட்டிலும் இடம்பெறுகின்றன.

குன்றக்குடிக் கல்வெட்டுகள் அக்காலத்து அரசியலமைப்பையும் அலுவலர்களையும் ஓரளவுக்குப் படம்பிடித்துக் காட்டுகின்றன. முதலாம் இராஜராஜரின் கல்வெட்டு அவரது பெருந்தரம் முகுந்தனூர் உடையார் காடன் ஸ்ரீயாரூர் தேவரை அறிமுகப்படுத்துகிறது. அரசின் உயர் அலுவலரான இவர் இந்நாளைய அரசுச் செயலர் போன்றவர் எனலாம். நாடுகள் நாட்டாரின் ஆளுகையில் இருந்தன. இவர்களுக்கென்று சில நிர்வாகப் பொறுப்புகளும் கடமைகளும் வரையறுக்கப்பட்டிருந்தன.

அதலையூர், கல்வாயில் நாடுகளின் தலைமைப் பொறுப்பேற்றிருந்த பெரியவர்கள், "நாடாள்வான்" என்ற சிறப்புப் பெயரால் குறிக்கப்பட்டுள்ளனர். ஏறத்தாழப் பதினொரு கல்வெட்டுகள் இத்தகு நாடாள்வார் பணிகளைப் பற்றிப் பேசுகின்றன.

முதலாம் இராஜேந்திர சோழரின் கல்வெட்டு இராஜேந்திர சோழ அதலையூர் நாடாள்வாரை அறிமுகப்படுத்துவதுடன் நாடாள்வாரின் கீழ்ப் படையமைப்புகள் இருந்தமையையும் தெரிவிக்கிறது. முதலாம் குலோத்துங்கரின் நாற்பதாம், நாற்பத்தொன்பதாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுகள் ஐநூற்றுவன் உய்ய வந்தானான அதலையூர் நாடாள்வார், நாட்டான் வீரசேகரரான விருதராஜ பயங்கர அதலையூர் நாடாள்வார் ஆகியோரை அறிமுகப்படுத்த, ஸ்ரீவல்லபரின் கல்வெட்டுகள் அதலையூர் நாடாள்வார்கள் வெள்ளானை விடங்கன் அவை பஞ்சானனையும் மும்முடிச் சோழன் வீரசேகரனையும் அடையாளம் காட்டுகின்றன.

விக்கிரம பாண்டியரின் ஆறாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டும் சோணாடு கொண்ட சுந்தரபாண்டியரின் எட்டாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டும் மேலுமிரண்டு அதலையூர் நாடாள்வார்களின் பெயர்களைத் தருகின்றன. சோணாடு கொண்டருளிய சுந்தர பாண்டியரின் மூன்று கல்வெட்டுகள் கண்டன் ஆளுடையானான கல்வாயில் நாடாள்வாரை வெளிக்கொணர்கின்றன.

இந்த நாடாள்வார்கள் நிலவரிகளில் செய்த சீரமைப்புகள் வரிவிலக்கங்கள், நாட்டார்க்கு இவற்றைத் தெரிவிக்க மேற்கொண்ட நடைமுறைகள் பற்றிச் சில கல்வெட்டுகள் விரிவான தகவல்களைத் தருகின்றன. இக்கல்வெட்டுகளால் பல ஊரவை அமைப்புகளைத் தெரிந்துகொள்ளமுடிகிறது. இவற்றுள் குன்றக்குடி ஊரவையும் ஒன்று. இந்த நிலவரிக் கல்வெட்டுகளில் நான்கு ஓலைச் செய்திகள் பேசப்படுகின்றன.

அதலையூர் நாட்டார்க்கு, அதலையூர் நாட்டாள்வாராலும் கல்வாயில் நாடாள்வாராலும் நிலவருவாய் குறித்து அனுப்பப்பட்ட இரண்டு ஓலைகள் சோணாடு கொண்டருளிய சுந்தரபாண்டியரின் எட்டாம் ஆட்சியாண்டில் மாசித் திங்கள், இரண்டாம் நாளில் எழுதி அனுப்பப்பட்டவை. புழக்கத்தில் கொணரப்பட்ட புதிய அளவுகோலான குடிதாங்கியால் அதலையூர் நாட்டு நிலங்களை அளந்து அதற்கேற்ப நிலவரிவிதிப்பைச் சீரமைத்துக் கொள்ளுமாறு அதலையூர் நாட்டார்க்கு இவை அறிவுறுத்துகின்றன. இப்பகுதிகளில் நிலமளக்கப் பயன்பட்ட பழைய அளவுகோல் பதினெண்சாண் அளவுள்ளதாகவும் புதிதாய் அறிமுகப்படுத்தப்பட்ட கோல் இருபத்து நான்கு சாண் அளவுள்ளதாகவும் குறிக்கப்படுகின்றன.

“தங்கள் நாடு முன்பு பதினெண் சாண் கோலானது தவிர்ந்து, குடிதாங்கி இருபத்துநாற் சாண் கோலாக்கி வந்த குடிதாங்கி நிலம் ஒரு மாவுக்குப் பண்டாடி பழநடை புள்ளி பார்த்து கழிவு நீக்கிக் கொண்ட நிலம் பண்டாடி பழநடை ஒன்று முக்காலாக்கி வந்த நிலம், ஒருமாவுக்குக் கடமை காலாய் எழு கலனே இருதூணியாய் வாசி ஏற்றி நாட்டவர் நாழிக் காலால் நெல் ஒன்பது கலனே இருகுறுணி நாநாழி உரியாக வந்தபடி இறுப்பதாக” எனும் கல்வெட்டு வரிகள் அந்நாளைய நில அளவை, வரிவிதிப்பு முறைகளை விளக்குவனவாகும். நியமத்துக் கண்டன் உதயஞ்செய்தானான காங்கேயரின் ஓலைகள் குன்றக்குடிக் கோயில் நிர்வாகிகளுக்கு நிலவரி நீக்கம் பற்றிய செய்திகளைத் தருவனவாக அமைந்துள்ளன.

## ஜீவிதம்

இங்குள்ள சில கல்வெட்டுகளில் குறிக்கப்படும் ஜீவிதம் என்ற சொல் வாழ்நாள் முழுவதும் அநுபவிக்கவல்ல நிலங்களையோ ஊர்களையோ சுட்டுவதாய் அமைந்துள்ளது. இராஜராஜ சோழரின் பெருந்தர அலுவலரான காடன் ஸ்ரீயாரூர் தேவருக்குத் தேனாற்றுப் போக்கில் ஜீவித நிலம் இருந்தது.

ஐநூற்றுவன் உய்யவந்தானான அதலையூர் நாடாள்வார் தேனாற்றுப் போக்கில் தமக்கு ஜீவிதமாய் அமைந்திருந்த செங்கணி, பலவாந்குடி, புரவுவரிநல்லூர், சிறுவெட்டி வயல், மணியாத்திறல், பாலைவாயில் போன்ற ஊர்களைப் பட்டியலிட்டுத் தருகிறார். வீரசேகரனான விருதராஜ பயங்கர நாடாள்வாரும் இது போலவே தேனாற்றுப் போக்கில் தமக்கு ஜீவிதமாக அமைந்திருந்த குன்றக்குடி, வெழலூர், படைகாணி, வேட்டங்குடி, காஞ்சிரங்குடி, பாதிரிக்குடி, சாழி, பாரீசுவரமங்கலம், மேற்கண்ணமங்கலம் எனும் ஊர்களை முதலாம் குலோத்துங்கரின் நாற்பதாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் அடையாளம் காட்டுகிறார்.

இங்குள்ள கல்வெட்டுகளில் காணப்படும் வரியினங்களின் பெயர்கள் பொதுவாகத் தமிழகத்தின் பல பகுதிகளிலும் அவ்வக் கல்வெட்டுகளின் காலத்தே வழங்கி வந்தவையாகவே உள்ளன. கடமை, குடிமை, அந்தராயம், வேலி அரிசி, புழுகு, பீலி, வெட்டி, முட்டாவாள், நாடென்ற அச்சுவரி, சில்வரி, பெருவரி, எச்சோறு, கூற்றரிசி, வினியோகம் எனப்படும் இவ்வரிகளுள் பெரும்பான்மையன நிலவரிகளாக அமைந்தன.

(தொடரும்)

---

## அன்பான வேண்டுகோள்!

*சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.*

*ஆயுள் சந்தாவாகவோ, ஆண்டுச் சந்தாவாகவோ புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.*

*- ஆசிரியர்*

# பூசை, பூசனை, பூசகர், பூசாரியார் ஒரு சிறு விளக்கம்

(தமிழண்ணல்)

"குன்றக்குடிக் குடைவரைகள்" பற்றிய, முனைவர் இரா. கலைக்கோவனின் முயற்சி பாராட்டுக்குரியது. அகழ்வாய்வு, செப்பேட்டாய்வு, கல்வெட்டாய்வு, நாணயவியலாய்வு, தொல் பொருளாய்வு போன்றவற்றில் ஈடுபாட்டோடு ஆராய்வார் தொகை பெருக வேண்டும். வெறும் வாய்ப் பந்தல் பெரும் பயன் தராது உலகம் கண்கண்ட ஆய்வுகளுக்கே முதன்மை மதிப்பளிக்கிறது.

இடைக் காலத்தே தமிழ் மூலநூல்கள் அழிக்கப்பட்டன. எல்லாம் சமசுக்கிருத மயமாக்கப் பட்டன.

காரைக்குடியில், வள்ளல் அழகப்பர் முன்னிலையில், குமாரி கமலா நாட்டிய நிகழ்ச்சியில், நினைவுப் பரிசு வழங்கிய ஆர்க்காடு இராமசாமி முதலியார், "நாட்டியம், நாகசுரம், கோயிற்கலை( சிற்பம்), ஆகியவை தமிழருடையன. அவை எந்த மொழியில் எழுதிவைக்கப்பட்டுள்ளன என்றாலும், அவை தமிழரின் சொத்துக்களே" என்று ஆங்கிலவுரையில் குறிப்பிட்டார்.

"சிற்பக்கலை, ஆடற்கலை, இசைக்கலை, கோயிற் கட்டடக்கலை இவற்றின் அனைத்து நூல்களும் வடமொழியில்தான் உள்ளன" என்று கலைக்கோவன் எழுதியுள்ளார். இவற்றைத் தமிழில் மீட்டுருவாக்கம் செய்ய வேண்டும் என்றும் குறிப்பிட்டுள்ளார். எனவே அவர் தெளிவாக இருக்கிறார். எனினும் "மக்கள் சிந்தனை" படிக்கும் பிற மக்களுக்காக இவ் விளக்கம் இங்கு தரப்படுகிறது.

1. முதலியார் பெருமகன் குறிப்பிட்டது போல சிற்பக்கலை, கோயிற்கலையில் ஈடுபடுவோர். சமசுகிருத வாதிகள் அல்லர்: அனைவரும் தமிழர்கள். தமிழகப் பெருந்தச்சர்கள்; தமிழையே தாய்மொழியாகக் கொண்டவர்கள். பிறகு இஃது எவ்வாறு சமசுக்கிருதத்தில் மட்டுமே உள்ளது? தமிழ் இலக்கியம் கூறும் நாட்டிய நன்னூல் நன்கு கடைப்பிடித்தாளே மாதவி; அந்நூல் எங்கே? சிற்பச் செந்நூல் - என வருகிறதே அஃது எங்கே?

2. ஆடற்கலை, இசைக்கலை வல்ல விறலியர், பாணர், பொருநர், கூத்தர் எல்லாம் எங்கே போயினர்? அவர்களை மண்டைப் பாணராக்கி

பிச்சையெடுக்கவைத்தோம். சுவரை அழித்தோம் ஓவியங்கள் அழிந்துபோயின. சிலரைக் குருமார்களாகக் கொண்டு முன்னிறுத்தி வழிபட்டோம். அனைத்தும் சமசுக்கிருதமாயின. பருதிமாற் கலைஞர் கூறுவதென்ன?

"இன்னும் அவர் (ஆரியர்) தம் புந்தி நலங்காட்டித் தமிழரசர்களிடம் அமைச்சர்களெனவும் மேலதிகாரப் பிரபுக்களெனவும் அமைந்து கொண்டனர்; தமிழரிடமிருந்த பல அரிய விஷயங்களையும் மொழிபெயர்த்துத் தமிழர் அறியுமுன்னரே அவற்றைத் தாமறிந்தன போலவும், வடமொழியினின்றுமே தமிழிற்கு அவை வந்தன போலவும் காட்டினர்" -தமிழ் மொழியின் வரலாறு .பக்.33.

மாமல்லபுரம் - மகாபலிபுரம். பெருவுடையார் - பிருகதீஸ்வரர். வாடாமலர் மங்கை - அசோக குஸுமாம்பாள். மருதீசர்-அர்ஜுன வனேஸ்வரர். ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம். இதுபோல் ஆயிரம் உள. "சமற்கிருதமயமாக்கல்" - எனும் எனது நூலொன்றில், இவை அனைத்தும் கோடிட்டுக் காட்டப் பெறுகின்றன.(எழுத்திலுளது).

கட்டுரை விளக்கத்தில் "கடியவலம்பிதம்" என்பதில், அவர்களின் "வேலைத்திறம்" விளங்கிவிடுகிறது. கடிய, வலம்பிதம் - ஒரு கலவைத்தொடராதல், அறிவுடையார்க்குப் புலனாகாமற் போகாது.

"பூசகர்" - என்பது வடசொல் எனக்குறிக்கப்பட்டுள்ளது. பூசை வேறு; பூஜா வேறு. பதஷ்டம் என்பதால் பதறிப்போய் பதற்றம் வடசொல் எனஆகாது. பதட்டம் ஒழியட்டும்; பதற்றம் சொல்லளவில் இருக்கட்டும். "வாய் பூசி வந் தேன்" - என்பது, இலக்கணத்தில், தொன்று தொட்டுக் காட்டப்பெறுவது. இடக்கரடக்கலுக்குக் காட்டுவது அது. பல் விளக்கி, முகங்கழுவி வருதலது. பூசுதல்-தூய்மைப்படுத்துதல். பூசா வாயர் (அகம். 265)- தூய்மை செய்யாத வாயினர். தெய்வச்சிலைகளுக்கு நீராட்டி, எண்ணெய்க் காப்பிட்டு, நாளும் தூய்மை செய்தனர். சிலைகளுக்கு சந்தனக் காப்பிடுதல், திருநீற்றுக் காப்பிடுதல் யாவும் பூசி அலங்கரித்தல். பூசனை-என்பது இறைத் திரு மேனிக்கு நாள்தோறும் தூய்மைப் படுத்தலும் அலங்கரித்தலுமேயாம். பூசிப் புணர்த்துதல் முதலான சொல்லாட்சிகளை, தமிழ்ப்பேரகராதி ஒழுங்குபடத்தந்திருப்பது, நம் திருமுறை, திவ்வியப் பிரபந்தம், காப்பியம் அனைத்திலும் இச்சொல் பூசனை பூசுதல், பூசித்தல், பூசகர் (பூசும் பணி செய்பவர்) என வந்திருப்பதை மறுக்க இயலாமையாலேயாம்.

திராவிட மொழி ஆய்வு வல்லுநர் புனித குமார சாட்டர்ஜி பூ+செய் = பூக்களால் வழிபட்டதன் பேரில் வந்ததென்றார். அதுவும் ஒலிஒற்றுமையால் ஏற்பட்ட கருத்தே. குண்டர்ட்டும், கிட்டல்லும் பூசு என்பதிலிருந்து வந்ததே பூசை எனக் கூறியுள்ளனர். எதையும் ஜூடாகச் சாப்பிடும் தமிழன்தான், பூசையைப் பூஜாவாக்கியவன். சிறப்பொடு பூசனை செல்லாது வானம், வறக்குமேல் வாகோர்க்கும் ஈண்டு (18). வடசொல், தமிழ்ச்சொல், மூலவேர் அறியப்படாத பக்தி என்பது போன்று வழங்கும் பொதுச்சொல் என மூன்றுள. வடசொல்லைத் தமிழ் எனல் தேவையற்றது, அதற்காகத் தமிழ்ச்சொல்லை வடசொல் என்பதும் கூடாது.

# தொண்டு

ஆற்றல் மிக்க அன்பால் இறைவனைப் பலகாலும் அழைக்க வேண்டும். சிவன் திருவருளை நினையுமாறு நினைத்து வாழ்த்த வேண்டும். பக்தி, ஞானம் இவ்விரண்டின் பயன் தொண்டு.

"தொண்டலால் உயிர்க்கு ஊதியமில்லை" என்றும் "தொண்டலால் துணையும் இல்லை" என்றும் அப்பரடிகள் விதந்து கூறுவார்.

"தொண்டே முக்திக்கு வாயில்" என்றார் அண்ணல் காந்தியடிகள். ஆனால் உலகியல் நடப்பு என்ன? இந்த உலகில் பலரும் அதிகாரத்தையே விரும்புகின்றனர். தொண்டு செய்ய யாரும் முன்வருவதில்லை. இறைவன் ஆன்மாக்களைத் தொண்டு நெறியில் பூட்டித்தான் ஆட்கொள்கிறான். உண்டு வாழ்வது தொண்டு செய்தற்கேயாம்!

தொண்டு செய்தென்றும் சோற்றுத் துறையர்க்கே
உண்டுநீ பணிசெய் மட நெஞ்சமே. (5.33.10)

என்று அப்பரடிகள் அருளிச் செய்துள்ளமையை ஓர்க! அப்பரடிகள் மேற்கொண்ட திருத்தொண்டினைத் திருவீழி மிழலையில் எழுந்தருளியுள்ள பெருமான் "கைத்திருத்தொண்டு" என்று சிறப்பித்து வாசியில்லாக் காசு தந்தருளிய பெற்றிமையை அறிந்து தொண்டு நெறியை மேற்கொள்வோமாக!

–அருள்நெறித்தந்தை
(அப்பர் விருந்து நூலில் இருந்து)

# தொலைக்காட்சியா? தொல்லைக் காட்சியா?

(கவிவேந்தர். கா. வேழவேந்தன்)

வளிவெளியின் ஒளிஅலையை நளினத் தோடு
வண்ணவண்ணப் படமாக்கிக் காட்டி, இன்று
களிப்பூட்டும் "நெடுமாயப் பேழை" என்றால்,
கண்கவரும் தொலைக்காட்சி நீயே யன்றோ?
எளிதாக யாம் நேரில் காண்ப தற்கே
இயலாத கடலாழ உயிர்கள் காட்டிக்
குளிர்வாட்டும் பனிமலைகள் காட்டிக் காட்டுக்
குகைவிலங்கை யெலாம்காட்டி வியக்க வைப்பாய்!

எங்கள் குல மங்கையரின் நேரம் எல்லாம்
எண்ணரிய தொடர்களினால் திருடு வானேன்?
பொங்கிஎழும் விழிநீரைப் பெருக்கி அன்னார்
பொழுதெல்லாம் அழுவதற்கே வழிசெய் வானேன்?
எங்களில்ல நல்லிளைஞர் உளங்கெ டுக்கும்
இழிநிகழ்ச்சி நல்குவதா? தமிழ்ப்பண் பாட்டைப்
பங்கமுறச் செய்கின்ற காட்சி காட்டிப்
பாழடிக்கும் உன் செயலில் நீதி உண்டா?

அறிவியலின் அறுவடையால் பிறந்த நீயா,
ஆங்காங்கே பூதத்தைப் பேயைக் காட்டி
நெறிமூட வெறிமடமை பரப்பு கின்றாய்?
நெஞ்சினிக்கும் கொஞ்சுதமிழ் அழகை யெல்லாம்
அறியாத நெறியாளர் சிலரோ நாளும்
அருந்தமிழைக் கடிக்கின்றார்; குதறு கின்றார்
முறைகேடர் அவர்திருந்த வேண்டும்; இன்றேல்
மூக்குடையும் என்றவர்க்கு நீயே சொல், சொல்!

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# வைப்புமுறை மாற்றத் தக்கதா?

(முனைவர். மு. பழனியப்பன்)

திருக்குறளில் இதுவரை பாதுகாக்கப்பட்டு வந்த மரபும், வைப்பு முறையும் தற்போது மாற்றப்பெற்று வருகின்றன. அதாவது 1. பால் பகுப்பைப் புறக்கணித்து அதனைப் பலவாக பிரித்துக் கொள்வது 2. அதிகார முறையை மாற்றி வைப்பது, அதிகாரத் தலைப்புகளை மாற்றுவது 3. பத்துக் குறள்கள் என்ற நிலையில் இதுவரை பின்பற்றப்பட்டு வந்த வைப்புமுறையை மாற்றியமைத்தல் முதலான மாற்றங்கள் தற்போது நிகழ்ந்து வருகின்றன. இந்த மாற்றம் தற்போது கட்டுடைத்தல் என்ற நிலையில் புதிய திறனாய்வின்பாற்பட்டது என்று ஒரு புறம் வரவேற்கலாம். என்றாலும் குழப்பமே நிலவும். மாற்றியமைக்கப்பட்ட முறைமையைக் கொண்டு உலகம் முழுவதும் பல்கிப் பெருகிவிட்ட பிரதிகளில் பொதுமையைக் காணமுடியாது. மாற்றியமைக்கப்பட்ட முறையும் ஒருவழிப்பட்டதாக இல்லாமல் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு அடிக்கருத்து அடிப்படையில் மாற்றியமைக்கப்பட்டிருப்பதால் திருக்குறளைச் சார்ந்து உலகம் முழுவதும் நடைபெற்று வரும் பல நிகழ்ச்சிகள் குழப்பத்தில் முடிந்துவிடும்.

சாதாரண மனிதர்க்கும் ஏற்ற வகையிலும், தற்கால நடைமுறை வாழ்க்கைக்கு ஏற்றவகையிலும் திருக்குறளின் வைப்புமுறை மாற்றியமைக்கப்பட வேண்டும் என்ற நிலையிலேயே இம்மாற்றங்களைச் செய்ய விரும்புவதாக மாற்றியமைத்த உரையாசிரியர்கள் கூறுகிறார்கள்.

"தமிழில் எத்தகைய இலக்கியப் பயிற்சியும் இல்லாத சாமானியரும் எக்காலத்திற்கும் பொருந்தும் திருக்குறளைத் தெரிந்து கொள்ளும்படி தரமுயலும் முயற்சி இது. இதன் நோக்கம் திருக்குறளைச் சிதைப்பது அன்று. அதன் அழகையும் உண்மையையும் இன்றைக்கு அது எல்லார்க்கும் பயன் தரும் பாங்கையும் வெளிப்படுத்துவதே" (சாலமன் பாப்பையா (உ.ஆ) திருக்குறள் உரையுடன் ப17) என்பது திருக்குறளின் முழுவடிவத்தையும் தன் விருப்பத்திற்கு ஏற்றவகையில் மாற்றி அமைத்துக் கொண்ட சாலமன் பாப்பையா அவர்களின் கருத்தாக உள்ளது.

காமத்துப்பாலைத் தவிர்த்து மற்ற பால்களில் முறைமாற்றத்தை ஏற்படுத்தித் திருவள்ளுவம் என்ற நூலைத் தந்துள்ள க.ப. அறவாணன்

"இந்நூலின் நோக்கம் வழக்கமான திருக்குறள் வரிசை முறையைப் போற்றுவதுடன் திருக்குறளைக் கருத்து (பொருள் conceptual அடிப்படையில் வழங்குவது ஆகும். திருக்குறளை வாசிக்க விரும்புவோர்க்கும் கருத்து அடிப்படையில் பொருளைத் தேடுவோர்க்கும் மிகவசதியாக இருக்கும் என்பதால் இம் முயற்சி மேற்கொள்ளப் பெற்றது" (க.ப. அறவாணன். திருவள்ளுவம்) என்று மாற்றத்திற்கான காரணத்தை வரையறை செய்கிறார்.

முன்னவர் திருக்குறள் வரிசைமுறை, எண்முறை போன்றவற்றை முழுமையையும் மாற்றிவிட பின்னவர் - அறவாணன் வரிசைப்படுத்தியபடி எண், திருக்குறள் பழைய மரபு எண் ஆகிய இரண்டையும் தந்து பழைய மரபு முறைக்கு மதிப்பளித்து உரைதந்துள்ளார். மேலும் அறவாணன் "அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ்" என்ற குறட்பாவில் தொடங்குவதன் மூலம் அறவாணன் வரிசைத் திருக்குறளும் "அ" என்ற எழுத்தில் இருந்து தொடங்கி விடுகிறது. காமத்துப்பால் மாற்றம் பெறாமையால் "ன்" என்ற மெய்யெழுத்தில் முடிவு பெற்றுவிடுகிறது.

ஆனால் இவர்கள் இருவரும் செய்துள்ள திருக்குறளின் பால்பகுப்புமுறைக்கு ஈடான பிரிப்புமுறை அவரவர் கருதுகோளுக்கு ஏற்ப அமைந்துள்ளது. சாலமன் பாப்பையா நூலின் உயிர், குடும்பம், சமுதாயம், அரசியல், நிர்வாகம், பண்பாடு, மெய்ப்பொருள் என்ற ஏழுவகையுள் பிரித்துள்ளார். அறவாணன் அறத்துப்பால் பொருட்பால் ஆகியவற்றில் உள்ள அதிகாரங்களைப் பின்வரும் பிரிவுகளில் அடக்கியுள்ளார். பண்பியல், கல்வியியல், வெற்றியியல், பொருளியல், மென்மையியல், குடும்பவியல், பால் உறவுக் குற்றவியல், கயவர் இயல், சமூகவியல், அரசியல், சான்றோர் இயல், தோழமைஇயல், வீர இயல், மீநம்பிக்கைஇயல், களவியல், கற்பியல் என்ற நிலையில் பிரிக்கப்பெற்றுள்ளது. இவரின் பகுதியில் காமத்துப்பால் மாற்றம் பெறாவிட்டாலும் அதன் முழுப்பகுப்புமுறைக்குக் காமத்துப்பால் என்ற பெயர் இடம் பெறச் செய்யப்படவில்லை.

முன்னவரின் உரைநூல் 1999ல் வெளியிடப்பெற பின்னவரின் நூல் 2006ல் வெளிவந்துள்ளது. ஏறக்குறைய ஏழு ஆண்டுகளில் முன்னவரின் பதிப்பு வரிசை ஏற்கப்பெறாமல் பின் ஒருவரால் வேறுவகையில் மாற்றம் பெற்றுவிட்டது. ஏழு ஆண்டுகள் கூட தாங்காத அளவில் அவ்வகைமைப்பாடு இருக்குமானால் அவ்வகைமைப்பாடு வெற்றி பெற்றது எனக் கொள்ளல் தகாது. இதே நிலை பின்னவரின்

நூலுக்கும் ஏற்படலாம். எனினும் இவர் திருக்குறள் எனத் தலைப்பை வைத்துக் கொள்ளாமல் திருவள்ளுவம் என வைத்துக் கொண்ட அளவில் திருக்குறளுக்கு உள்ள மரபு உயிர் காக்கப்பெற்றுவிட்டது எனக் கொள்ளலாம். இன்னும் சில ஆண்டுகளில் ஒவ்வொரு தமிழாசிரியரும் ஒவ்வொரு கருத்தை முன்வைத்து முறைமையை மாற்றலாம். இந்த இருவருக்கான அனுமதி மற்றவர்க்கும் உரியதாகவே ஏற்றுக்கொள்ளப் பெற்றுவிடும்.

இவ்வகையில் அவரவர் கருத்து அடிப்படையில் திருக்குறளை முறைமை செய்யப் புகுந்தால் இறுதியில் திருக்குறள் இருக்காது. "கட்டிடத்தின் அடித்தளத்தையே அசைத்துவிட்டு கட்டிடத்தை அழகு படுத்துகிறேன் என்று சொன்னால் எவனும் ஏற்றுக்கொள்ள மாட்டான். (ச.வே. சுப்பிரமணியம் வள்ளுவம் இதழ் புத்தக மதிப்புரை 06.2000 ப.81)" என்ற ஆய்வாளரின் கருத்து இதுபோன்று முறைமை மாற்றும் உரையாளர்க்கு எச்சரிக்கை செய்கிறது.

சொந்த வீட்டை இடித்துக் கட்டலாம். சொந்த நூலை மாற்றி வைக்கலாம். உரையாசிரியர்கள் இம்முறையில் மூலநூலை மாற்றம் செய்யப் புகுவது சரிதானா என்று ஒரு கேள்வி எழுப்பினால் அதற்கு தொல்காப்பிய நூற்பாக்கள் விடை தருகின்றன? சொல்லப்பட்டன எல்லா மாண்பும் மறுதலையாயின் மற்றது சிதைவே (தொல் பொருள் 651) "சிதைவில என்ப முதல்வன் கண்ணே (தொல் பொருள் 652)" என்ற மரபியல் நூற்பாக்கள் முதல் நூலின் மறுதலைகளை ஏற்பதில்லை என்ற கருத்தைத் தருவன. முதல் நூலைச் சிதைக்கும் வேலைகளில் உரையாசிரியர்கள் இறங்க வேண்டாம் என்ற இந்த பொன்னே போல் போற்றும் முறைமை இக்காலத்திற்குத் தேவை. வழி வழி மரபாக உரையாசிரியர் காத்து வந்த முதல் நூலுக்கான மரபைச் சிதைக்க எவருக்கும் அனுமதி இல்லை. அதிலும் குறிப்பாக உரை எழுதப் புகுபவர் முதன் நூலை மேன்மைப்படுத்த வேண்டுமே தவிர அவர் பதிப்பாசிரியராகச் செயலாற்ற இயலாது. இந்நடைமுறைகளைப் பார்க்கும்போது "எழுதியவன் ஏட்டைக் கெடுத்தான், படித்தவன் பாட்டைக் கெடுத்தான்" என்ற பழமொழி எக்காலத்திற்கும் உரியதாக மாறிவிடுகிறது.

அச்சுக்கலை வந்தபின் தமிழ் வளரத்தொடங்கிவிட்டது என்றாலும் தற்போது அந்தத் துறையின் அபார வளர்ச்சி தமிழுக்குத் தடையாக அமைகிறதோ என எண்ணத் தோன்றிவிடுகிறது. காரணம் தினம் தினம் புத்தகங்கள் எழுதுபவரின் எண்ணிக்கை கூடிக்கொண்டே

போகிறது. புத்தகம் வெளியிடும் நிறுவனங்கள் அதிகரித்துவிட்டன. ஆனால் புத்தகத்தின் தரம் அதன் கருத்து இவற்றில் குறைபாடுகள் பல உள்ளன. நூலாசிரியர்கள் ஒவ்வொருவரும் ஒரு பதிப்பகத்தின் உரிமையாளராக மாறிவிட்டனர். இதன் காரணமாக முன்னர் தமிழ் வெளியீட்டு உலகில் இருந்த தணிக்கை முறை தற்போது இல்லை. அதாவது பழைய காலத்தில் "பரிசோதிக்கப் பெற்றது" என்ற நிலையில் மூத்த அறிஞர் ஒருவரின் ஒப்புதல் பெற்ற நூல் வெளியிடும் முறைமை இருந்தது. இன்னும் பழைய காலத்தில் அரங்கேற்றும் முறை இருந்தது. இதில் ஒரு படைப்பு விவாதிக்கப் பெற்ற பின்னரே வழக்கிற்கு வரும்.

இதுபோலவே பதிப்புத்துறையில் தரம் கொண்ட நிறுவனங்கள் இருந்தன. அவை தரப்படுத்தப்பட்ட புத்தகங்களை மட்டுமே வெளியிட்டன. இற்றைக் காலத்தில் நூல் வெளியிடுவதில் இலாபம், பணம், புகழ் முதலியன முக்கியப் பங்கு வகிக்கின்றன. இதன் காரணமாக நூல் தரம் என்பது கேள்விக்குறியாகிவிட்டது.

மேலே திறனாயப் பெற்ற இரண்டு நூல்களும் உரையாசிரியர்களின் சொந்தப் பதிப்பகங்கள் வாயிலாக வெளியிடப்பெற்றவை என்பது இங்குக் கருதத்தக்கது. வெளியிட ஆர்வமும், பொருளும் அமைந்துவிட்டால் அவரவர் நோக்கத்திற்கு புத்தகங்களைச் சந்தைப் பொருளாக்கிவிடலாம். இந்தச் சந்தை மயமாக்க மக்களால் ஏற்கப்படுமா என்பது ஐயமே. பல பதிப்புகளைக் கண்ட மரபு வைப்புமுறை கொண்ட திருக்குறள் போல இவை நிலைக்கக்கூடியன அல்ல என்பது அழியா உண்மை.

எனவே காலவெள்ளத்தில் முழுமை பெற்று மரபாக உள்ள நூல்களை அதன் மரபு கெடாமல் குலையாமல், குறைக்காமல் கூட்டாமல் வெளியிடுவது என்பதே நல்லது. ஒரு பக்க மரபுகளை உடைத்தெறிவதில் தவறில்லை. எவ்விதத்திலும் ஊறு செய்யாத நல்ல மரபுகளைக் காப்பாற்றி இன்னும் சில நாட்களுக்காவது வைத்திருக்கவேண்டியது ஒவ்வொரு தமிழரின் கடமை ஆகும்.

இக்கட்டுரை திருக்குறளின் வைப்புமுறை பற்றிய வேறுபாடுகளை மட்டுமே தொட்டுக் காட்டுகிறது. வைப்புமுறை மாற்றங்கள் நிகழ்த்திய நூல்களின் தரங்கள் குறித்து பெரும் விவாதமே எழ வேண்டும். அப்படி எழும் அந்த விவாதங்கள் இனி வரும் நூல்களின் தரத்தை உறுதி செய்யும். இல்லையாயின் தரமிலா நூல்களை தமிழ் இலக்கிய வரலாறு சுமக்க வேண்டியதாகிவிடும்.

---

# திருவள்ளுவம் – ஓர் ஆய்வு நூல்; பதிப்பு நூல் அன்று!

(முனைவர். இரா. அறவேந்தன்)

ஜெர்மனி - ஹைடல்பர்க்குப் பல்கலைக்கழகப் பேராசிரியர் முனைவர். அ. தாமோதரன் "திருக்குறள் மேற்கோள் விளக்கம்" எனும் நூலை 1970-இல் வெளியிட்டுள்ளார். அந்நூலின் முகப்புப் பகுதியில் முதுபெரும் தமிழ் - மொழியியல் அறிஞர் பேராசிரியர் வி.ஐ.சு. அவர்கள் தொலைநோக்குப் பார்வையில் விரிவான ஆய்வுரை ஒன்றை எழுதி உள்ளார்கள். திருக்குறள் தொடர்பாக அறிஞர்கள் செய்ய வேண்டிய பணிநிலையைச் சுட்டிக்காட்டுவதாக அவ்வுரை அமைந்துள்ளது. சுட்டிக்காட்டப்பெற்றுள்ள கருத்துக்கள் இரு வகைக்கு உரியன. அவை :

1. திருக்குறள் பதிப்புத் தொடர்பாக மேற்கொள்ள வேண்டியவை.
2. திருக்குறள் ஆய்வு தொடர்பாக மேற்கொள்ள வேண்டியவை.

திருக்குறளுக்கான உரை வேற்றுமை, உரைக்கொத்து நூல்கள் வெளிவந்துள்ளன. சொல்லடைவுகள் சிலவும் வந்துள்ளன. இவற்றுடன் வேறு சில நிலைகளிலான பணிகளும் திருக்குறள் பதிப்புக்குத் தேவை என்று குறிப்பிட்டதுடன் கீழ்வரும் கருத்தை அறிஞர் முன்வைத்துள்ளார்.

1. உலகம் முழுவதும் உள்ள திருக்குறள் சுவடிகளைத் தொகுத்தல், ஆராய்தல், பதிப்பித்தல்.

2. திருக்குறள் தொடர்பான பல்வேறு வகையான அடைவுகளை (Concordance/Index) உருவாக்குதல்.

இவற்றில் திருக்குறள் தொடர்பான அடைவுகள் பல நிலைகளில் உருவாக்கப்பெறுதல் வேண்டும் என்பதைக் கீழ்வருமாறு குறித்துள்ளார்.

பதிப்புப் பணிக்கு சொல்லடைவு மட்டுமே (Word Index) முழுமையாகத் துணை செய்துவிட முடியாது. தொடரடைவும் (Phrase Index), சிறு வாக்கிய அடைவும் (Clause Index) பெருவாக்கிய அடைவும் (Sentence Index) பொருளடைவும் (Subject Index) தயாரித்துக் கொள்ளப்பட வேண்டும்.

ஒப்புமை அடைவு (Comparative Concordance) ஒன்றையும் தொகுத்தாலன்றி அடைவுப் பணி முற்றுப் பெறாதெனலாம்...

அறிஞர் சுட்டும் அடைவு வகைப்பாட்டுடன் கருத்தடைவு (Thematic Index) அதாவது கருத்தியல் நிலையிலான பகுப்பு (Conceptual Classification) ஒன்று தேவைப்படுகின்றது எனலாம்.

ரிக்வேதம், பைபிள், பகவத்கீதை போன்ற உயர்நிலைச் செல்வாக்குப் பெற்ற நூல்களுக்குக் கருத்தடைவுகள் பல்வேறு தொகுதிகளாக் வெளியிடப்பெற்றுள்ளன. திருக்குறளுக்கான கருத்தடைவு முயற்சியை மு. சண்முகம் பிள்ளை மேற்கொண்டுள்ளார். சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ள "திருக்குறள் அமைப்பும் முறையும்" எனும் அவர்தம் நூலில் திருக்குறள் அதிகாரப்பெயர்கள் பல்வேறு கருத்தியல் நோக்கில் "அதிகாரப் பெயர் வகை" எனப் பகுத்தளிக்கப் பெற்றுள்ளன (1972:24) சான்று ஒன்று வருமாறு:

| | | | |
|---|---|---|---|
| அறிதல் | : | அவை அறிதல் | 72 |
| | : | இடன் அறிதல் | 50 |
| | : | ஒப்புரவு அறிதல் | 22 |
| | : | காலம் அறிதல் | 49 |
| | : | குறிப்பு அறிதல் | 71, 110 |
| | : | செய்ந்நன்றி அறிதல் | 11 |
| | : | வலி அறிதல் | 41 |

கருத்துவழிப் பகுப்பைத் தமிழ் மரபிலக்கண அடிப்படையில் "தொகையாக்கம்" என்று குறிப்பிடலாம். அறிஞர் கு.ச. ஆனந்தம் திருக்குறள் உரை எனும் பெயருடன் பதிப்பித்துள்ள கருத்துவழிப் பகுப்பை அறிஞர் வ.சுப. மாணிக்கனார்,

"தொல்காப்பியர் மொழிந்த நால்வகை நூல் நெறியுள், "தொகுத்தல்" என்பதும் ஒன்று. முதல் நூரில் அகன்று கிடக்கும் கருத்துக்களை ஒருசேரத் தொகுத்துக் காட்டல் எனப் பொருள் கொள்ளலாம். பொருளடங்கல் என்று இன்று சொல்வதையும் ஒப்பு நோக்குக. ஆதலின் ஆனந்தனார் கொண்ட ஒரு பொருளடக்க வைப்பு மரபு வழிப்பட்டது" (கு.ச.ஆனந்தன், 1999; viii)

என்று குறிப்பிட்டு விளக்கி உள்ளது இங்குச் சுட்டத்தக்கது. தமிழில் பண்டைத் தமிழ் நூல்களுக்குக் கருத்துவழிப் பகுப்பு முயற்சிகள் நூல்களாக வெளிவந்துள்ளன. சான்றுகள் வருமாறு.

| | | |
|---|---|---|
| 1.சங்க இலக்கியம் - | புலவர் பெயர் அடிப்படை | - எஸ்.வையாபுரிப்பிள்ளை |
| 2. புறநானூறு - | திணை, துறை அடிப்படை | - கி.இராசா |
| 3. நாலடியார் - | உட்கருத்து அடிப்படை | - 1. வை.மு.கோ<br>2. வேதகிரி முதலியார் |
| 4. பழமொழி நானூறு - | உட்கருத்து அடிப்படை | - 1. தி. செல்வக்கேசவராய முதலியார்<br>2. கழகப் பதிப்பு<br>3. வர்த்தமானன் பதிப்பு |
| 5. திருக்குறள் - | தலைமைக்குறள் அடிப்படை | அ.நடேச முதலியார் |
| | அகரவரிசை அடிப்படை | 1. ரா.ந. கல்யாணசுந்தரம்<br>2. ஜனகாசுந்தரம்<br>3. ஆரூர் தாஸ் |
| | - உட்கருத்து அடிப்படை (பதிப்புகள்) | 1. வ.உ.சி, 2. திரு.வி.க.<br>3. கு.ச. ஆனந்தன்<br>4. சாலமன் பாப்பையா<br>5. அ.மா.சாமி |
| | - உட்கருத்து அடிப்படை (ஆய்வு) | - 1. மு.வ.<br>2. க.ப. அறவாணன் |
| 6. இலக்கண நூல்கள் - | உட்கருத்து அடிப்படை | - ச.வே.சு |
| 7. சிதைந்து போன இலக்கண நூல்கள் - | உட்கருத்து அடிப்படை | - இளங்குமரனார் |

இது போன்ற அடைவுகள் ஒரு நூலுக்கே பல்வேறு கோணங்களில் பல்வேறு அறிஞர் பெருமக்களின் அறிவுத் திறனுக்கு ஏற்ப வெளியிடப் பெறுதல் வேண்டும். இத்தகு வெளியீட்டால் திருக்குறள் தொடர்பான ஆய்வாளர்களும் பிற இலக்கிய ஆய்வாளர்களும் அடைகின்ற பயன் பெரிதாக அமையும். அதாவது, கருத்தடைவு - கருத்துவழிப் பகுப்பு நூல்கள் "கருவி நூல்களாக" ஆய்வுலகில் கருதப் பெறுகின்றன. இதனைக் கீழ்வருமாறு செந்தமிழ் அந்தணர் அருமையாக விளக்கி உள்ளார் (2003 iii-v)

மேற்கோளாகப் பலப்பல நூல்களில் பலப்பலரால் காட்டப்பட்டவற்றை மட்டும் தொகுத்தல் சாலுமெனக் கொண்டு.... தொகை செய்யப்பட்டன.... இத்தொகை பொதுமக்கள் பயன்பாட்டு நூல் என்பதனினும் புலமக்கள் போற்றிக்கொள்ள வேண்டிய கருவி நூல் என்பதே தகும்.

எனவே, கருத்துவழிப் பகுப்பு என்பதே தொகை வகைப்படுத்தி அளிக்கும் ஒரு வகையான ஆய்வு தான் எனலாம்.

இதுவரை, விளக்கப்பெற்ற கருத்துவழிப் பகுப்புத் தொடர்பான வரலாற்று நிலைப் பின்புலத்தின் அடிப்படையில்தான் இன்று வெளிவரும் கருத்துவழிப் பகுப்பு நூல்களை அணுகவேண்டும்; ஆராய வேண்டும். அதுவும் கருத்துவழிப் பகுப்பிற்கு அடிப்படையாகக் கொள்ளப்பெற்ற அளவுகோலை நன்கு உள்வாங்கிக் கொண்டே ஆராய்தல் வேண்டும். இல்லை எனில் பதிப்பு நூலாகக் கருதி மயங்கும் நிலைதான் உருவாகும்.

அண்மையில் தமிழறிஞர் க.ப. அறவாணன் அவர்களால் திருவள்ளுவம் எனும் நூலின் இரண்டாம் பகுதியில் கருத்துவழிப் பகுப்பு அளிக்கப்பெற்றுள்ளது. இப்பகுப்பிற்குச் சமூகவியல் அடிப்படையாக அமைந்துள்ளது. கு.ச. ஆனந்தன் தம்முடைய கருத்துவழிப் பகுப்பைத் “திருக்குறள் உரை” என்று பெயரிட்டுப் பதிப்பித்துள்ளார். நூலுக்குள் ஐந்து இயல்களாக அறத்துப்பால், பொருட்பால் குறட்பாக்கள் பகிர்ந்தளிக்கப்பெற்றுள்ளன. ஆனால், க.ப. அறவாணன் தம் கருத்துவழிப் பகுப்பை, கருத்துவழிப் பகுப்பு என்றே பெயரிட்டு ஆய்வு நூலின் ஒரு பகுதியாக அளித்துள்ளார். கருத்துவழிப் பகுப்பில் அறத்துப்பால், பொருட்பால் அதிகாரங்கள் 14 இயல்களில் பகுத்தளிக்கப்பெற்றுள்ளன; அதாவது க.ப. அறவாணன் அவர்கள் தம் நூலை ஆய்வு நூலாகவே வெளியிட்டுள்ளார்; பரிமேலழகர் உரை, கலைஞர் உரை, சிற்பி உரை என்பது போன்று உரை நூலாக பதிப்பு, நூலாக வெளியிடவில்லை. இதற்கேற்பவே நூலின் பெயரைத் திருவள்ளுவம், A Reference Book of Thirukkural என்று முறையே முன்பின் அட்டைகளில் அளித்துள்ளார்; நூல் பெயரில் உரைப்பதிப்பு நூல் எனும் அடையாளத்தை வெளிப்படுத்தவில்லை.

இதுபோன்று பொதுவழக்கில் உள்ள ஒரு நூலைக் கருத்துவழிப் பகுத்து அளிக்கையில் அதன் முறை வைப்பில் மாற்றம் நிகழும் என்பது வெளிப்படை. ஆனால், முறை வைப்பை அளிக்கையில் கவனமாக ஆய்வு நெறிமுறை ஒன்றைக் கருத்துவழிப் பகுப்பாளர் பின்பற்றுதல்

வேண்டும். பொது வழக்கில் உள்ள நூலின் பாடல் எண்களைத் தன் விருப்பப்படி மாற்றுதல் கூடாது. பொது வழக்கில் உள்ள பாடல்களைக் கருத்துப் பகுப்பில் எந்த முறைவைப்பில் அளித்தாலும் பொது வழக்கு எண்ணைத் தவறாமல் குறிப்பிட வேண்டும். இந்த நெறிமுறை பின்பற்றுதலைக் கு.ச. ஆனந்தன், க.ப. அறவாணன் ஆகிய இருவர் தம் நூல்களிலும் காணமுடிகின்றது.

தமிழ் ஆய்வில் பண்டைத் தமிழ் நூல்களுக்குரிய பாடல்களை எடுத்தாள்கையில் நூலின் பெயர் புறம், அகம், தொல் என்று சுருக்கமாக அளிக்கப்பெற்றுப் பாடலின் எண் இடப்பெறும். இதுபோன்றே திருவள்ளுவம் நூலின் கருத்துவழிப் பகுப்பில் "திரு" எனும் சுருக்கத்துடன் பரிமேலழகரின் குறள் எண்கள் எல்லா இடங்களிலும் இடம்பெற்றுள்ளன. இதனால், குறிப்பிட்ட குறளுக்கான எண் பொது வழக்கிலும் திருவள்ளுவம் நூலின் கருத்துவழிப் பகுப்பிலும் ஒன்றாகவே அமைகின்றன. சான்று ஒன்று வருமாறு :

> பொள்ளென ஆங்கே புறம்வேரார் காலம்பார்த்து
> உள்வேர்ப்பர் ஒள்ளி யவர் (திரு. 487)

இந்தத் திருக்குறளுக்கான எண் பரிமேலழகர் உரையிலும் 487தான், திருவள்ளுவம் ஆய்வு நூலிலும் 487தான்.

இந்த எண் இடுமுறை திருவள்ளுவம் நூலின் முன்னுரைப் பகுதியில் மிகத் தெளிவாக நூலாசிரியரால் விளக்கப்பெற்றுள்ளது.

கருத்துவழிப் பகுப்பு நூல்கள் நோக்கீட்டு நூல்கள் (Reference Books) என்பதால், கருத்துவழிப் பகுப்புத் தொடர்பான பல்வேறு விளக்கங்களையும் அட்டவணைகளையும் நூலில் அளித்தல் நன்று. அதுவும், பொதுவழக்கில் உள்ள எண்ணை முன்னிறுத்தி அளித்தல் நன்று இதனால் வாசகர் நிலையில் குழப்பங்கள் நேர்வதைத் தவிர்க்கலாம். திருவள்ளுவம் நூலில் கருத்துவழிப் பகுப்பைத் தொடர்ந்து விரிவான அட்டவணை அளிக்கப் பெற்றுள்ளது. அதுவும் பரிமேலழகர் எண் வரிசையின் ஆற்றெழுக்கு அடிப்படையில் அளிக்கப்பெற்றுள்ளது. இதுபோன்ற அமைப்பு முறைகளால் தான் "திருவள்ளுவம்" எனும் நூல் பதிப்பு நூல் தன்மையிலிருந்து வேறுபட்டு, ஆய்வு நூலாக மிளிர்கின்றது. இது தொடர்பாக மேலும் தெளிவு பெற, திருவள்ளுவம் நூலாசிரியரின் கருத்தையறிய காலச்சுவடு இதழ் (மே 2007) வெளியிட்டுள்ள அவர்தம் கடிதப் பகுதி பெரும் துணையாக அமைகின்றது. அப்பகுதி வருமாறு :

திருவள்ளுவம் எனும் 792 பக்கங்களையுடைய என் நூல் திருக்குறளுக்கு வரையப்பட்ட உரை நூல் அன்று; திருக்குறள் பதிப்பும் அன்று. தங்களின் இதழில் வெளிவந்துள்ள குறிப்பு திருக்குறள் உரைநூல் என்றும், பதிப்பு நூல் என்றும் பிழைபடக் குறிக்கப்பெற்றுள்ளது. இந்நூல் திருக்குறளைப் பற்றிய ஆராய்ச்சி நூல். இச்செய்திகள் தங்கள் இதழில் வந்த குறிப்பில் மறைக்கப்பெற்றுள்ளன. 506 பக்கங்களில் முதல் பகுதியாகத் திருக்குறள் பற்றிய பதினான்கு ஆராய்ச்சிக் கட்டுரைகளும் (முதல் 188 பக்கங்கள்), எஞ்சிய 318 பக்கங்களில் திருக்குறள் கருத்தடைவும், பொருளடைவும் அகர வரிசைத் திருக்குறள் பாக்களும் வழங்கப்பெற்றுள்ளன.

இரண்டாம் பகுதி, திருக்குறளைக் கருத்தடைவு (Thematic index) அடிப்படையில் பகுத்து உரை கூறுகிறது. இவ்வுரைப் பகுதியும் 286 பக்கங்கள் மட்டுமே. காமத்துப்பாலில் அதிகார வரிசை முறையோ, திருக்குறள் வரிசை முறையோ எதுவும் மாற்றப்பெறவில்லை. எஞ்சிய அறத்துப்பால், பொருட்பால் பகுதியிலும் பரிமேலழகர் மேற்கொண்ட எண் வரிசை முறை திருக்குறள் எனப் பெயரிடப்பட்டு ஒவ்வொரு திருக்குறளை அடுத்தும் நிரல்பட நல்கப் பெற்றுள்ளது. அந்த எண்கள் மாற்றப் பெறவில்லை. நூலினுடைய நோக்கம் இதுதான். உரை எழுதுவது நோக்கமன்று, பதிப்பிப்பதும் நோக்கம் அன்று.

உள்நோக்கம் கொண்ட சிலர், இந்நூலைப் பற்றித் தவறாக பிரச்சாரம் செய்கின்றனர். மிகச் சிறப்பாகவும், கவனத்துடனும், சரிபார்ப்புடனும் வெளிவரும் தங்கள் புகழ் பெற்ற ஏட்டில் பொய் கருத்து இடம்பெற்றது என் போன்ற தொடர் வாசகனுக்கு மிகுந்த வருத்தத்தைத் தருகின்றது.

## காலம் அறிந்து போற்றுதல்

காலம் அறிந்து போற்றுதல் என்பது காலந்தவறாமை எனும் ஒழுக்கத்தின் பாற்பட்டது. வாழ்க்கையை அளந்து பயன்பாடு கொள்வதற்குரிய கருவி காலமேயாகும். காலத்தை வீணடிப்பது வாழ்க்கையையே பாழாக்கிவிடும். காலமறிந்து கடமைகளைச் செய்தல் வெற்றி பொருந்திய வாழ்க்கைக்கு வழிவகுக்கும். காலமறிதல் வாழும் மனிதர் ஒவ்வொருவருக்கும் தேவையான ஏற்பாடு, ஒழுக்கம் என்பதை மறத்லாகாது.

– அருள்நெறித்தந்தை

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# "அருளாலயக் குமுறல்"

(தமிழாகரர். தெ. முருகசாமி, புதுச்சேரி -9)

சொத்துக்குவிப் பென்னும் அந்தச்
சுகபோக வாழ்க்கை பற்றி
ஒத்தொருவர் வழக்கு மன்றில்
உயர்நீதி கிடைக்க வேண்டிச்
சித்தமுடன் வழக்குச் செய்தால்
செத்தபிண மாகச் சில்லோர்
மெத்தவே நீதி பதியை
மிரட்டினால் குமுறல் தானே!

கிரிக்கெட்டின் வெற்றிக் காகக்
கிளர்ந்தெழும் இளைஞர் கூட்டம்
கிரிவலம் வந்த தோடு
கிளர்ச்சியுடன் யாகம் செய்தே
திரிந்ததோ டன்றித் தெய்வத்
திருக்கோயில் தன்னில் தங்கத்
திருத்தேரும் இழுத்தார்! வெற்றித்
திசைமாறிப் போன போது;

ஆடினோர் வீட்டைச் சாடி
அவர்படம் தன்னைத் தீயில்
மூடியே கொளுத்திப் போட்டு
முறையற்ற வகையில் ஆடிக்
கூடியே குமுறிக் குமுறிக்
குறையான சொற்களாலே
சாடியே அருச்சித் தார்கள்!
சரித்திரந்தான் மாறா தென்றா?

தோல்விதான் வெற்றி யாகி
தொடர்ந்திட்ட போது முன்னர்
வாலறுந்த பல்லி போல
வகைவகையாய்க் குதித்தோ ரெல்லாம்
பால் கொதிப்பில் சொரிந்த நீரால்
பதமாக அடங்கி னார்கள்!
சேல்போலத் துள்ளிச் சேதம்
செய்ததெலாம் என்ன ஆச்சு?

கோபத்தை ஆடினோர் மீது
    கொள்ளல்தான் சரியென் றிட்டால்
கோபிக்கும் அளவில் தோல்வி
    கொடுத்திட்ட தெய்வம், யாகம்,
கோயிலென எல்லாந் தானே
    குறைக்கான கார ணங்கள்!
கோபத்தை அவற்றின் மீதும்
    கொள்ளாமல் விட்ட தேனோ?

விளையாட்டில் வெற்றி,தோல்வி
    வரும்போகும் என்ப தல்லால்
விளைவித்த விபரீ தத்தை
    விலக்கவா முடியும்! கொண்ட
களைப்பிற்காய் அந்தோ நஞ்சு
    கலந்திட்ட மோரைத் தானும்
திளைப்புடன் குடிப்பா ருண்டா?
    திரிகரண சுத்தி யுள்ளார்!

இன்னுமே சொல்லப் போனால்
    இந்தியப்பா ராளு மன்றை
நன்முறை யாகத் தானே
    நடக்கவிட மாட்டா ராகி
வன்முறை வளர்போக் காலே
    வளர்ச்சிகள் குன்றிப் போக
நன்மனம் குமுறு தம்மா
    நம் நாட்டின் கட்சிக ளாலே!

ஆதலால் குமுறல் நீங்க
    அருளாலய அருகில் சென்று
காதலால் கரும்பைத் தானும்
    கடித்திட இனிக்கு மாப்போல்
"ஓதிடும் ஒறுத்தல் தன்னால்
    உருப்படும்!, சரியா?" என்றேன்,
மோதிடும் மணிநா ஓசை
    மொய்த்ததே குமுற லாக!

---

(பங்குனி இதழ்த் தொடர்ச்சி)

# கம்பன் என்றொரு மானிடன்

(தமிழாகரர்.பேராசிரியர். **சாமி. தியாகராசன்**)

இலக்குவன் பதிலை அப்படியே ஏற்றுக்கொள்ள வேண்டும் எனச் சொல்லும் இவர்களிடம், இதே பதிலை இராமன் சொல்லியிருந்தால் அதனால் வரும் இழுக்கு என்ன? குறை என்ன? என்று கேட்டால், தான் இத்தகைய குணங்கள் உடையவன் என்பதைத் தன் வாயாலேயே இராமன் சொன்னால் அது தன் பெருமைக் குணங்களைத் தானே எடுத்துச் சொன்னதாக முடியும். இது தற்புகழ்ச்சியின்பாற்படும். ஆதலால் இராமன் தானே சொல்லாமல் இலக்குவனைச் சொல்லவிடுத்து வாளா இருந்தான் என்கின்றனர்.

மேலும் அவர்கள், தமிழ்நாட்டில் கம்ப இராமாயண விரிவுரையாளர்கள் இலக்குவன் விடையை அலட்சியப்படுத்தியே இதுவரை வாலி வதைக்குக் காரணம் கூறி வந்துள்ளனர் என்றும்; இலக்குவன் கூற்றைப் பொய் எனக் கூறக்கூடாது என்றும்; அவ்வாறு சொன்னால் அது கம்பனுக்கு இழுக்கு என்றும், கம்பனுக்கு மதிப்பளிப்பதாக இருந்தால் இலக்குவன் விடையை முழு உண்மை என்றே கொள்ள வேண்டும் என்றும் உறுதிபடக் கூறுகின்றனர்.

இவர்கள் கூறும் கருத்துக்களைப் பற்றிச் சிந்திப்பது நமது கடமையாகிறது. தற்புகழ்ச்சி என்றால் என்ன? ஒருவன் தன் தகுதிகளைத் தானே புகழ்ந்து கூறுவது தற்புகழ்ச்சி எனப்படும். புகழ்ந்து என்ற சொல் மிகைபடக் கூறல் என்பதைச் சுட்டி நிற்கிறது.

இலக்குவன் சொன்னவற்றை இராமன் சொல்லியதாக மாற்றிப் பார்ப்போம். "உன் தம்பி என் துணைவேண்டி என்னிடம் அடைக்கலம் புகுந்தான். முறை தவறிய (அவன் மனைவியைப் பெண்டாகக் கொண்டு, அவனை மன்னிக்க மறுத்த) உன்னைக் கொல்வேன் என அவனுக்கு வாக்குத் தந்தேன். இந்த நிலையில் நீயும் வந்து சரண்புகுந்தால் என்ன செய்ய முடியும்? உன்னைக் கொல்லுவேன் என்ற எனது வாக்கை மீறி உனக்கு அடைக்கலம் தர முடியுமா? முடியாதே. ஆதலால் மறைந்து நின்று அம்பு எய்தேன்" என்று இராமன் கூறினான் என்று கொள்வோம்.

இவ்வாறு கூறுவதில் என்ன தற்புகழ்ச்சி இருக்கிறது. இல்லையே. மாறாக நடந்த நிகழ்ச்சிகள்தான் சொல்லப்படுகின்றன. நடந்த நிகழ்வுகளைக் கூறுவதற்கும், புகழ்ந்து கூறுவதற்கும் மிகப் பெரிய வேறுபாடு உண்டே. இந்தக் கூற்றில் தன்னை மிகுத்து இராமன்

கூறுகின்றான் எனச் சொல்ல இடமுண்டா? இல்லையே. உண்மையைக் கூறுவதற்கும் தன்னைப் புகழ்ந்து சொல்வதற்குமான வேறுபாட்டை உணராது போனதால் இலக்குவன் கூற்றை ஏற்போர் மயங்கத் தலைப்பட்டவராகக் காட்சியளிக்கின்றனர். ஆதலால் அவர்கள் வாதம் வலுவிழந்து போகிறது.

மேலும், இலக்குவன் விடையை அப்படியே கொண்டால் ஆய்வுக்கு வேலையே இல்லை என்பது தெளிவு. ஆனால் காலம் காலமாக இலக்குவன் விடையை ஆய்வு செய்கிறார்களே, அவர்களெல்லாம் கம்பனைக் கற்காதவர்களா என்ன?

இலக்குவன் சொல்லிய விடைக்கான காரணம் சரி என்பார் கூற்றில் வலுவில்லை என்பதால் அதனை விடுத்து, அதன் விடைக்கான காரணம் ஏற்க இயலாது என்பார் கூற்றை இனிக் காண்போம்.

இவர்கள், தன் பகைவனாகிய சுக்கிரீவனுக்குத் துணையாக வருபவனிடம் வாலி சரணாகதி அடைவானா? துணைக்கு வருபவனையும் அழிக்க வேண்டும் என்று தானே நினைப்பான். போருக்காகவே வந்து நிற்கும் ஒருவனிடம் சுத்த வீரனாகிய வாலி சரண் புகுவான் என நினைப்பதில் என்ன நியாயம் இருக்க முடியும் என்றும்; இராமனால் ஆக வேண்டியது அவனுக்கு ஒன்றுமில்லையே என்றும் கூறுவதுடன், மேற்கொண்டு நல்ல கேள்வி ஒன்று கேட்கின்றனர். அந்தக் கேள்வி எது? இலக்குவன் விடையை நாம் ஏற்பதும் ஏற்காததும் ஒரு புறம் இருக்கட்டும், தொடர்புடைய வாலி இலக்குவன் விடையை ஏற்றானா? இல்லையா? என்பதுதான் அது.

இதற்கு விடை காணப் புகுமின் மிக முக்கியமான நிகழ்வினை நாம் பார்த்து உள்ளத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். அந்த நிகழ்வு எது? தன் முன் வந்து நின்ற இராமனைப் பார்த்துச் சரமாரியாகக் கேள்விக் கணைகளைத் தொடுக்கின்றான் வாலி. அவன் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்கிறான் இராமன். இராமன் சொல்லிய விடைகளை எல்லாம் வாலி வாங்கிக் கொண்டானா? அலட்சியப் படுத்தினானா? என்றால் நன்றாக நிதானமாக வாங்கிக் கொண்டான் என்று எண்ணும்படியே கம்பன் இடம் தந்துள்ளான்.

"அவ்வுரை அமையக் கேட்ட
அரிகுலத்து அரசும் மாண்ட
செவ்வியோய் அனையது ஆக"

என்னும் செய்யுளில் காணப்படும் "அவ்வுரை அமையக் கேட்ட" என்னும் தொடர் வாலி இராமன் கூறிய செய்திகளை மனத்தில் பதியுமாறு கேட்டான் என்பதை தெளிவாகச் சொல்கிறது.

மேலும், தன்மேல் அம்பு எய்து உயிர்க்கு இறுதி தேடியவனைப் பார்த்து மாட்சிமை பொருந்திய நற்குணங்களை உடையவனே! என விளிக்கும் வாலி இலக்குவன் பதில் கேட்டு ஏதேனும் சொன்னானா? அவன் பதிலை ஏற்றுக் கொண்டானா? என்றால் இல்லை என்றே பதில் சொல்லவேண்டியுள்ளது.

தான்கேட்ட கேள்விக்கு இலக்குவன் சொல்லிய பதிலை ஏதோ சமாதானம் கூறுகிறான் என எடுத்துக் கொள்கிறானே தவிர அந்தப் பதிலைப் பெரிதாக வாலி எடுத்துக்கொள்ளவில்லை என்பதை, இலக்குவன் பதிலுக்கு அடுத்து வரும் கவிக்கூற்றாகிய தனது பாடலில் கம்பன் குறிப்பாக உணர்த்திச் செல்கிறான்.

"கவி குலத்து அரசும் அன்ன கட்டுரை கருத்தில் கொண்டான்" என்னும் தொடரின் மூலம் இலக்குவன் பதிலுக்கு ஏற்றம் தராமல் இராமன் கூறியவற்றிற்கே வாலி ஏற்றம் தருகின்றான் எனச் சொல்கிறான் கம்பன். அன்ன கட்டுரை என்பதற்கு இலக்குவன் கூறிய பதில் சொற்கள் எனப் பொருள் கொள்ள வேண்டும் என்பர் சிலர். அப்பொருள் சிறப்பில்லாதது. ஏனெனில் கட்டுரை என்ற சொல் சில சொற்களைக் குறித்து வருவது அன்று. பல செய்திகளைச் சேர்த்து, இணைத்துக் கட்டிச் சொல்வதையே அது குறிக்கும். இவ்விடத்தில் இலக்குவன் பல செய்திகளைச் சேர்த்துக் கட்டிச் சொல்லவில்லை. அவ்வாறு சொன்னவன் இராமன். "அன்ன" என்ற சுட்டுச் சொல் இராமன் தொகுத்துச் சொல்லிய செய்திகளை வாலி கருத்தில் கொண்டான் என்ற போதே இலக்குவன் சொன்னவற்றை அவன் கருத்தில் கொள்ளவில்லை என்பது தானே விளங்கும்.

(தொடரும்)

## காலம் அறிதல்

காலம் அறிதல் என்பதாவது காலத்தின் அருமையை அறிதல், செய்யவேண்டிய பணிகளை அவற்றிற்குரிய காலத்தில் அறிந்து செய்தல். காலம் தவறிச் செய்யப்படும் எந்தப் பணியும் உரிய பயன் தராது. சில பணிகள் உரிய காலத்திற்கு முன்பே செய்யப்பெற்றாலும் பயன் தராது போதல் உண்டு. சில காரியங்கள் அவற்றிற்குரிய பருவ காலங்களில் மட்டுமே செய்யப்பெறும். உரிய காலத்தைத் தேர்ந்து செய்யப்பெறும் காரியமே முழுப்பயனைத் தரும். நட்பு பகை போன்றவற்றில் கூட உரிய காலம் அறிந்து ஒழுகினால் தான் பயன் கிடைக்கும். இரண்டாவது மகா யுத்தத்தில் மிகப்பெரிய வெற்றியைப் பெற்ற இட்லர் குளிர் காலத்தில் சோவியத் நாட்டின் மீது படையெடுத்தது அவனுக்குத் தோல்வியைத் தந்தது. சோவியத் நாட்டின் குளிரைச் செருமானியப் படைகளால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

– அருள்நெறித்தந்தை

குன்றக்குடி

# அருள்தரு சண்முகநாதப் பெருமான்
# விசாக விழா

நாள் : 30.5.2007 புதன் ★ இடம் : ஆதீனத் திருமடம்

காலை 7.30-900 : அருள்தரு சண்முகநாதப் பெருமான் திருமடத்துக்கு எழுந்தருளல்

பகல் 7.30 : திருமுழுக்காட்டல், சிறப்பு வழிபாடு

இரவு 6.30 மணி : **பாராட்டுவிழா**

**திருவருள்திரு குருமகாசந்நிதானம்** அவர்கள்

மேதகு நீதியரசர் திருமிகு. **எம். சொக்கலிங்கம்** அவர்களுக்கு

"***இறை நீதி அண்ணல்***" பட்டம் வழங்கிப் பாராட்டுதல்

**பாராட்டுரை :**

மாண்புமிகு. **கே.ஆர். பெரியகருப்பன்** அவர்கள்
அறநிலையத்துறை அமைச்சர்

முனைவர். **சி. சுப்பிரமணியம்** அவர்கள்
துணைவேந்தர், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சை

கணக்காயர்.முனைவர். **தமிழண்ணல்** அவர்கள்

இலக்கியச்சிந்தனை. **ப. இலட்சுமணன்** அவர்கள்

மீனாட்சிமைந்தன். **வி.என். சிதம்பரம்** அவர்கள்

இரவு 10.00 மணி : சுவாமி வெள்ளிரதத்தில் திருவீதி உலா.

***அனைவரும் வருக! ஆறுமுகன் அருள் பெறுக!!***

**- குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம்**



# மக்கள் கல்வி நிலையம்

(மனிதவள மேம்பாட்டு அமைச்சகம், இந்திய அரசு)

**குன்றக்குடி - 630 206**

**✆ : 04577 - 264567 Mobile : 94433 64200**

குன்றக்குடி மக்கள் கல்வி நிலையம், கிராமம் மற்றும் நகர்ப்புற மக்களுக்கு கீழ்க்கண்ட தொழில்நுட்ப பயிற்சிகள் வழங்கிவருகிறது. பயிற்சி நிறைவு பெற்றபின் சான்றிதழ்களும், தொழில் துவங்க ஆலோசனைகளும் வழங்கப்படும். சுய உதவிக் குழுக்கள், கிராமப்புற மக்கள், இளைஞர்கள், பெண்கள் அனைவரும் இந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

இயக்குநர்,

**மக்கள் கல்வி நிலையம், குன்றக்குடி.**

## பயிற்சிகள் (TRADES)

1. தையல் பயிற்சி 2.கணிப்பொறி பயிற்சி 3. எலக்ட்ரிக்கல் வயரிங் மற்றும் ரிப்பேரிங் 4. மின்அணுக்கருவிகள் பழுதுபார்த்தல் 5.வெல்டிங் பயிற்சி (பற்றவைத்தல்) 6.சீட் மெட்டல் உற்பத்தி 7.பைபர்கிளாஸ் பொருள்கள் உற்பத்தி 8.கட்டிட தொழில்நுட்பம், பொருள்கள் உற்பத்தி 9.இரண்டு நான்கு சக்கர வாகன பராமரிப்பு மற்றும் ரிப்பேரிங் 10.கயிறு மற்றும் பாய் தயாரித்தல் 11. குளிர்சாதனப் பெட்டிகள் ரிப்பேரிங் 12.வார்ப்பு உலோக உற்பத்தி 13.ஹாலோ பிளாக் & மொசைக் கற்கள் தயாரித்தல் 14. சாக்பீஸ், மெழுகுவர்த்தி தயாரித்தல் 15. கம்ப்யூட்டர்சாம்பிராணி, பினாயில் தயாரித்தல் 16. மருத்துவ உதவியாளர் 17.மருத்துவ உபகரணங்கள் பழுதுபார்த்தல் மற்றும் கையாளுதல் 18. திரை அச்சு வேலைகள் 19. வீட்டு உபகரணப் பொருட்கள் பழுதுபார்த்தல் 20.யோகா ஆசிரியர் பயிற்சி 21. ஓவியம் மற்றும் வரைபடம் வரைதல் 22. கைவினைப்பொருட்கள் தயாரித்தல் 23. உணவுப் பொருட்கள் தயாரித்தல் 24. கேஸ் வெல்டிங் 25. தொழில்முனைவோர் மேம்பாட்டுப்பயிற்சி 26. இயற்கை உயிர் உரம் (மண்புழு) தயாரித்தல் 27. வேளாண் சார்ந்த பயிற்சிகள் 28.தோட்டக்கலை சார்ந்த பயிற்சிகள் 29. கால்நடை சார்ந்த பயிற்சிகள் 30. மின்சாதனப்பொருட்கள் பராமரிப்பு

| | | |
|---|---|---|
| தகுதி | : | தன்முனைப்பு, தன் ஆர்வம் மட்டும். |
| பயிற்சி நேரம் | : | பயிற்சி நாள்தோறும் இரண்டு மணி நேரம் மட்டும். ஒன்றுக்கும் மேற்பட்ட பயிற்சிகளில் சேரலாம். |
| குறிப்பு | : | ஒவ்வொரு பயிற்சிக்கும் பயிற்சி நிறைவு பெற்றபின் தேர்வின் அடிப்படையில் சான்றிதழ்கள் வழங்கப்படும். |

## தவத்திரு குன்றக்குடி அடிகளாரின்

# *புதிய நூல்*

உலகம் முழுக்கத் திருக்குறள் பரப்பப் பேரவை கண்டவர்; தம் வாழ்நாள் முழுக்க வள்ளுவ நெறியினை வழங்கி நின்றவர்; வாழ்ந்து நிலைத்தவர் ஆகிய அடிகள் பெருமான் எழுதிய திருக்குறள் உரை முதன் முதலாக, நூல் வடிவமாக!







**தவத்திரு குன்றக்குடி அடிகளார்**
**திருக்குறள் உரை**
(விலை. ரூ. 160/- பக்கங்கள் : 360)

பதிப்பகங்கள், கல்லூரி, பள்ளி, நிறுவனங்கள் மற்றும் இலக்கிய அமைப்புகள் இவற்றோடு மாணவ, மாணவியர்க்கும் "மக்கள் சிந்தனை" சந்தாதாரர்க்கும் விலைச் சலுகை உண்டு.

அடிகளாரின் முத்துவிழா வெளியீடு

**அருள்நெறிப் பதிப்பகம்**
குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்.

**MAKKAL CHINTHANAI - May 2007** **Price Rs. 5-00**

Date of Publication **20-05-2007**

Register of News Paper for India No. 85913/81 Register No. TN/SR-266/2006-2008






பெறுநர்

திரு [illegible] அவர்கள்

[illegible]

[illegible]

[illegible]

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166